கம்யூனிஸ்டு கட்சியின்

# தேர்தல் அறிக்கை



[இரண்டாம் பதிப்பு]

இந்தியக் கம்யூனிஸ்டு கட்சி
தமிழ்நாடு கமிட்டி
1/6, டேவிட்ஸன் தெரு, ஜி. டி. சென்னை.

மார்ச்சு 1946] [விலை அணா 2

# முன்னுரை

மூன்று மாதங்களுக்கு முன்னதாக கம்யூனிஸ்டு கட்சியின் தேர்தல் கொள்கை வெளியிடப்பட்டது. அந்தக் கொள்கைத் திட்டத்தை நன்று பரிசீலனை செய்த பின்னர் கட்சியின் மத்தியக் கமிட்டி இந்தத் தேர்தல் அறிக்கையில் கம்யூனிஸ்டு கட்சி எந்தத் திட்டத்திற்கு எந்த வகையில் போராடும் என்பது நன்கு விளங்கும். வருங்காலத்தில்—ஏன் இங்கே இப்பொழுது—நாம் எவ்வளவு சீக்கிரத்தில் சுதந்திரம் பெறுவதற்கு முடியும் என்பது தெளிவாகத் தெரியும். நாங்கள் முன்வைக்கும் திட்டம் யாருக்கு ஆத்திரமூட்டுகிறது என்பதைக் கண்டால், இன்று கம்யூனிஸ்டு எதிர்ப்புக்குத் தூண்டிவிட்டு தூபம் போடுபவர்கள் ஜனங்களின் விரோதிகள் என்பதை உணர முடியும்.

இந்திய கம்யூனிஸ்டு கட்சி
தமிழ்நாடு கமிட்டி.

Janasakti Press Q. H. M. S. 374
Tamilnad Committee of Communist Party of India
R. O. No. E. L. 46.
Date of Printing: 12th March 1946.

# இந்திய சுதந்திரத்திற்கான இறுதிப் போராட்டம்

சகோதர சகோதரிகளே !

கீழ்க்காணும் அம்சங்களைக்கொண்ட திட்டத்திற்கு உங்களுடைய மனமார்ந்த ஒத்துழைப்பையும் ஆதரவையும் கம்யூனிஸ்ட் கட்சி கோருகிறது.

1. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிடிப்பிலிருந்து உடனடியாக விடுதலை அடைவது.

2. தேசபக்தி வாய்ந்த பொதுஜன ஸ்தாபனங்களனைத்தும் கூட்டணியாகப் பிணைக்கப்பட்டுள்ள சகலசுதந்திர இந்தியர்களும் சேர்ந்து நடத்தும் ஓர் ஒன்றுபட்ட போராட்டத்தைத் துவக்குவது.

3. நம்முடைய நாட்டு மகாஜனங்களனைவரும், தேசிய இனங்களனைத்தும்—உண்மையான சம்மதம் பெற்று, பரிபூர்ண அரசுரிமைகொண்ட சுதந்திரத்தைப் பெற்று. அதன்மீது கட்டப்படும் பொதுஜன சுபீட்சத்தை ஏற்படுத்துவது.

## I

## இந்தியர்
## இந்தியருடன் சண்டையிடக் கூடாது

தேசபக்திவாய்ந்த மற்ற அரசியல் கட்சிகளைப் பற்றிப் பழி கூறிக்கொண்டு, அவர்களைத் தாக்குவதற்குக் கையைத் தூக்கிக் கொண்டு நிற்காத கட்சி கம்யூனிஸ்டு கட்சி ஒன்றுதான். இந்தியாவிலுள்ள பிரதான அரசியல் கட்சிகளுடனும் அரசியல் கட்சிகளுக்கிடையிலும் பரஸ்பர நல்லுறவு ஏற்பட்டு, ஒருவரை யொருவர் புரிந்துகொள்ள வேண்டு மென்பதற்காக பாடுபடுகின்றது. தேர்தல் போராட்டத்திலே ஏற்படும் மனக்கசப்புகளைப் பாராட்

டாமல், தேசிய காங்கிரசிற்கும் மூஸ்லிம் லீகுக்கும் தற்சமயம் இருக்கும் தீவிர அபிப்பிராய பேதங்களைப் பாராட்டாமல் கம்யூனிஸ்டு கட்சி இந்தப் பரஸ்பர நல்லுறவுக்காக பொறுமையுடன் பாடுபடுகின்றது.

கம்யூனிஸ்ட் கட்சியின் முக்கியமான முயற்சி சுதந்திரப் பிரியர்களான இந்தியர்களிடையேயுள்ள வித்தியாசங்களை நீக்கி, இந்திய சுதந்திரத்திற்கான இறுதிப் போராட்டத்தை ஆரம்பிக்கும் ஐக்கிய சுதந்திர அணியை ஏற்படுத்துவதே, எண்ணற்ற தியாகிகளின் தியாகத்தின் நோக்கத்தைப் பூர்த்தி செய்யவேண்டும். நம் முன்னோர்களுடைய கனவுகளை நினைவாக்கவேண்டும்; நம் யுவர்கள் வீரர்களாகப் போராடவேண்டும்; புகழும், கீர்த்தியும், சுக வாழ்வுமுள்ள சுதந்திரத் தாயகங்களிலே நம் சந்ததிகள் வீர புருஷர்களாகவும். ஒப்பற்ற பெண்மணிகளாகவும் வளரவேண்டும். இவ்வனைத்துக்கும் நாம் இறுதிப்போராட்டத்தை ஆரம்பிக்க வேண்டும்.

நம் தாய் நாட்டை அரசாளும் ஏகாதிபத்தியவாதிகள்மீதுநம் காரமனைத்தையும் காட்டவேண்டும். உள்நாட்டுச் சண்டையிலும் பூசலிலும் ஒரு தோழனை இழப்பதும், ஒரு வார்த்தை வீணுகப் பிரயோகிப்பதும் குற்றமென்று கம்யூனிஸ்டு கட்சி கருதுகின்றது.

"இந்தியன் இந்தியனுடன் சண்டை போடக்கூடாது. சகல இந்தியர்களும் சேர்ந்து நம்மை அடிமைப்படுத்திக்கொண்டிருக்கும் பிரிட்டிஷாருடன் போராடவேண்டும்" என்பது ஒன்றே எங்கள் கட்சியின் கோஷம்.

புராதன பண்பும் புகழும்பெற்ற நம்முடை நாட்டை பிரித்தாளும் சூழ்ச்சியின் மூலம் பிரிட்டிஷார் பிடித்தனர்; கடந்த இரு நூறு வருஷங்களாக **பிரித்தாளும் சூழ்ச்சியினுல்** அவர்கள் நம்மை ஆண்டுவந்திருக்கின்றனர். இன்னும் இங்கே நீடித்திருப்பதற்குத் திட்டம் போடுவதிலும் பிரித்தாளும் சூழ்ச்சியைப் பயன்படுத்திக்கொள்ளப் பார்க்கிருர்கள்.

இந்தியாவைப் பலபாகங்களாகப் பிரித்து, தனித்தனியாகவும் மொத்தமாகவும் இந்தியாவின்மீது தங்களுடைய ஆதிக்கத்தை நீடித்துக்கொள்வதற்காக ஏகாதிபத்தியம் வகுத்துள்ள புதிய திட்டத்தை எதிர்த்து அனைவரையும் திரட்டுவதற்கு கம்யூனிஸ்ட் கட்சி முயற்சிக்கிறது.

இந்திய மக்களுடைய ஆத்திரமும் வெறுப்பும் மலைபோல் திரண்டு வருகிறது; உலகத்திலுள்ள சுதந்திரப் பிரியர்களுடைய மனச் சாட்சியும் ஏகாதிபத்திய அநீதிகளை உணர்ந்துவருகின்றது.

பழைய முறையில் இந்தியாவை அடிமைப்படுத்தி வைக்கவோ, பழைய முறையிலே இந்தியர்களைப் பிரித்துவைக்கவோ முடியாது என்பதை பிரிட்டிஷ் ஏகாதிபத்திபவாதிகள் உணருவதற்கு ஆரம்பித்துவிட்டனர்.

## அடிமை தனத்துக்கு திட்டம்

இந்தியாவின்மீது அவர்கள் நிலைநாட்டிய அமைப்பு அழிவது திண்ணம்.

இந்த நாட்டை விட்டு நம்மை ஆள்பவர்களை விரட்டி, அவர்கள் நம்மீது சுமத்தியுள்ள சமூக அமைப்பை நாம் மாற்றி அமைப்பதற்கு சகல இந்தியர்களும் சேர்ந்து போராடுவதற்கு முன்னால் அவர்களுடைய ஆட்சி முறையைத் தாங்களாகவே தங்களுடைய நலன்களுக்கேற்றபடி மாற்றி அமைத்துக்கொள்ள அவர்கள் திட்டம் போட்டுக்கொண்டிருக்கின்றனர்.

அவர்களுடைய திட்டம் பின்வருமாறு; ஹிந்துக்கள் மெஜாரிட்டியாகவுள்ள ஹிந்து டொமினியன், முஸ்லிம்கள் மெஜாரிட்டியாகவுள்ள முஸ்லிம் டொமினியன், சமஸ்தானாதிபதிகள் இந்தியா ஆகிய மூன்று நாடுகளாக இந்தியாவைப் பிரிக்கவேண்டுமென்பது அவர்களுடைய திட்டம். ஹிந்து, முஸ்லிம் டொமினியன் நாடுகளுடைய அரசியல் சட்டங்கள் பிரிட்டிஷ் சர்க்காருடன் அந்த நாடுகள் தனித்தனியாக நிறுவவேண்டும்; அதே சமயத்தில் சமஸ்தானாதிபதிகள் பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் பிரத்யேக ஒப்பந்த உறவை ஏற்படுத்திக்கொள்ளுவார்கள்.

காங்கிரஸ், லீக்—ஆகிய இரு பொதுஜன ஸ்தாபனங்களாக உருவெடுத்துள்ள மாபெரும் பொதுஜன எழுச்சியைப் பிரித்து தனித்தனி துறைகளிலே திருப்பிவிடலாம் என்று எண்ணுகிறார்கள். அவர்களுடைய கைப்பாவைகளான சமஸ்தானாதிபதிகள் மூலம் மறைமுகமாகத் தங்களுடைய ஆதிக்கத்தைக் காப்பாற்றிக் கொள்ள பார்க்கிறார்கள்.

நம் நாட்டை சாஸ்வதமாகக் கூறுபோட்டுவிட்டு புதிய வகையிலே நம்மை அடிமைப்படுத்துவதற்காகத் தந்திரமாக வகுக்கப்பட்டுள்ள திட்டம் அது.

அவர்களுடைய திட்டம் ஆதாரமாகக் கொண்டுள்ள கொள்கைகளும், அவர்கள் கையாளும் தந்திரத்தின் முக்கிய அம்சங்களும் 1942-ல் வெளியான கிரிப்ஸ் திட்டத்திலும், 1945-ல் வேவல் திட்டத்திலும், அதன்பின்னர் பிரிட்டிஷ் தொழிற்கட்சி சர்க்காரால்

விடுவிக்கப்பட்ட அறிக்கைகளிலும் காணலாம். பிரிட்டிஷ் தொழிற்கட்சி சர்க்கார் அதற்கு முன்னால் பதவியிலிருந்த டோரி (ஏமரி கட்சி) கட்சியாரின் பிரகடனத்தைத்தான் வியாக்கியானம் செய்கின்றன.

இந்தியர்கள் தாங்களாகவே தங்களுக்குள் ஒரு ஒப்பந்தத்திற்கு வர முடியாது; காங்கிரஸும் லீகும் ஒன்றையொன்று கிட்ட நெருங்கி காரியத்திற்கும் ஒன்றுசேர முடியாது என்ற எண்ணத்துடன் அவர்கள் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. இந்த நம்பிக்கையினால்தான் இந்தியாவின் அரசியல் சட்டத்தை அமைப்பதில் முக்கிய அம்சங்களைத் தீர்மானிக்கக்கூடிய முன் நடவடிக்கைத் தங்களைச் சேர்ந்ததாகும் என்று எண்ணுகிறார்கள்.

இந்தத் தந்திரத்தில் முதல் நடவடிக்கை ஆரம்பித்துவிட்டது. அவர்களுடைய இஷ்டப்படி தேர்தல் நடைபெறுகின்றது.

(i) 100 க்கு 70 பேருக்கு ஓட்டுரிமையை மறுக்கும் யோக்யதையை ஆதாரமாகக்கொண்ட ஓட்டுரிமை முறையில் தேர்தல் நடக்கின்றது.

(ii) பிரிடிஷார் ஏற்படுத்திய தான்தோன்றித்தனமான எல்லைக் கோடுகளை உடைய பிரிட்டிஷ் அரசாங்கம் அமைத்துள்ள மாகாணங்களில் தேர்தல் நடக்கின்றது.

புதிய சட்டசபைக்கு வரும் பிரதிநிதிகள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அமைக்கும் அரசியல் நிர்ணய சபைக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கச் சொல்வது இத்திட்டத்தின் இரண்டாவது நடவடிக்கை, பிரதிநிதிகளில் பெரும்பான்மையோர் காங்கிரஸ்காரர்களாகவும் லீகர்களாகவும் இருப்பார்களென்பது ஏகாதிபத்திய வாதிகளுக்குத் தெரியும்.

காங்கிரஸ் தலைவர்களும் லீக் தலைவர்களும் ஒரு ஒப்பந்தத்திற்கு வருவதற்கு இயலவில்லை என்பதை நம்பி இன்னொரு ஸிம்லா நாடகத்தை நடத்தலாம் என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இந்தியர்களிடையேயுள்ள வித்தியாசங்களைத் தம்பட்டமடித்து, முடிவான தீர்ப்பை அளிக்கும் பொறுப்பைத் தாங்களே ஏற்றுக்கொள்ளமுடியும் என்று நம்புகின்றனர்.

இந்தத் துஷ்ட தேவதை தந்திரத்தின் உருவத்தை (ப்ளூ-பிரின்ட்) ஆசிரியர் கூப்லந்து எழுதியுள்ள "இந்தியாவின் அரசியல் அமைப்புப் பிரச்னை" என்ற புத்தகத்தில் காணலாம். ஆசிரியர் கூப்லந்து காலனி சம்பந்தப்பட்ட சமாசாரங்களில் நிபுணர் என்று பெயர் பெற்றவர். லண்டனிலுள்ள இந்தியக் காரியாலயத்திற்கு அவருடைய வாக்கு வேதவாக்கு. 1942ல் கிரிப்ஸுடன் அவர் இந்தியாவுக்கு வந்திருந்தார்.

"இந்தியாவின் தேசபக்தி சுதந்திர ஆர்வமும் திறமை யற்றது" என்று உலகத்திற்கும் பறைசாற்றி தாங்கள் தலையிட்டு தங்கள் திட்டத்தைச் சுமத்துவதற்கு தார்மீக உரிமையைப் பெறு வதற்காக அவர்கள் போடும் திட்டம் அது.

இத்திட்டம் பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் காலடியில் இந்தியாவை வைத்துப் புதிய அடிமைத் தனத்தை ஏற்படுத்துமே யன்றி இந்திய சுதந்திரத்தை அளிக்காது—பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகளின் நோக்கம் இதுதான்.

**புதிய அடிமைத் தனத்தை ஏற்படுத்தி, நம்முடைய நாட்டை நிரந்தரமாகக் கூறுபோடும் ஏகாதிபத்திய திட்டத்தை எதிர்க்க கம்யூனிஸ்டு கட்சி தன்னுடைய முழு பலத்தையும் திரட்டி நிறுத்து கிறது.**

பிரிட்டிஷ் சர்க்கார் ஒரு கட்சியைப் புறக்கணித்துவிட்டு தங்க ளுடன்தான் சமரஸம் பேச வருவார்கள் என்று எண்ணும் பிர மையை காங்கிரஸ் தலைவர்களும் லீக் தலைவர்களும் கைவிடா விட்டால் ஏகாதிபத்தியத்தின் திட்டம் கைகூடும்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் எந்தக் கட்சியினுடனும் சமரஸம் செய்துகொள்ளப் போவதில்லை. ஒரு கட்சியை எதிர்க்க இன்னொரு கட்சியைக் கிளப்பி விடுவார்கள். தங்களுடைய தீர்ப் பைத் திணிப்பார்கள்; அனைவருக்கும் சுயநிர்ணய உரிமையை மறுப்பார்கள். இந்த வகையிலே இந்தியாவைவிட்டு வெளியேறு மல் தப்பித்துக்கொண்டு, புதிய திரை மறைவில், புதிய உடை களுடன் நின்றுகொண்டு இந்தியாவின் உண்மை யஜமானர்க ளாக வாழலாம் என்று எண்ணுகிறார்கள்.

இத்தகைய முடிவு இந்தியர் அனைவருக்கும் அவமானத்தை அளிக்கும்; ஒருவருக்கும் விமோசனத்தை அளிக்காது; காங்கிர ஸின் பிரதான நோக்கம் இடேறுது; லீகின் முக்கிய லட்சியம் கை கூடாது; பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் வெற்றியாக முடியும்.

## ஏகாதிபத்திய திட்டத்திற்குத் தடை

**பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தின் திட்டத்திற்கு எதிராக ஓர் இந் தியத் திட்டத்திற்கு—ஐக்கியப்பட்ட இந்தியருடைய திட்டத்திற்கு —அடிப்படையாக நியாயமான கொள்கைகளைக் கம்யூனிஸ்டுக் கட்சி ஜனங்களின் முன்னுல் வைக்கிறது:**

எல்லா இந்தியர்களின் உள்ளத்திலும் அணையாது சுடர்விட் டெறியும் சுதந்திர ஜோதியைக் கம்யூனிஸ்டு கட்சி அழைக்கின் றது; அதற்கு வேண்டுகோள் விடுக்கின்றது.

இந்தியாவின் சுதந்திரம்தான் கம்யூனிஸ்டு கட்சியின் உடனடி லட்சியம்.

உண்மையான சுதந்திரக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்ட இரு கோஷங்களை கம்யூனிஸ்டுகட்சி உங்கள் முன்னல் சமர்ப்பிக்கிறது. சுதந்திரத்தை விரும்பும் ஒவ்வொரு இந்தியனும் அதை ஏற்றுக்கொள்வான்.

முதலாவதாக நாட்டை அரசாளும் பிரிட்டிஷாரை முகம் எடுத்துப்பார்க்க வேண்டாம். உங்களுடைய சகோதர இந்தியரை நோக்கி அவர்களுக்கு கை கொடுங்கள்.

சுதந்திரத்தை விரும்பும் எந்தக் கட்சியும் பிரிட்டிஷ் சர்க்காருடன் தனிப்பட்ட சமரஸத்தை ஏற்படுத்திக்கொள்ள முயற்சி செய்யக்கூடாது; ஏனெனில் அப்படிச் செய்தால் அந்தக் கட்சித் தலைவர்கள் அவமதிக்கப் படுவார்கள் அல்லது அக்கட்சியின் லட்சியங்களை அவர்கள் கட்டிவைக்க நேரிடும்.

இரண்டாவதாக பிரிட்டனுக்கு எதிராக நாம் இந்தியாவின் சுயநிர்ணய உரிமையை நிலைநாட்டவேண்டும். அதை வெற்றிகரமாக்குவதற்காக அதேசமயத்தில் இந்தக் கொள்கையை இந்தியர்களுக்கிடையிலும் எவ்வித நிபந்தனையுமின்றி ஏற்றுக்கொள்வோம் என்று பிரகடனப்படுத்த வேண்டும் என்கிறோம்.

இந்தியாவின் சுதந்திரம் இந்தியாவிலுள்ள சகல ஜனங்களுடைய சுதந்திரம் என்பதை இந்த வகையில் கம்யூனிஸ்ட் கட்சி உருவகப்படுத்த முயற்சிக்கிறது. இந்த வகையில் மைனாரிட்டிகளாயுள்ள ஜனங்கள் தங்கள்மீது பிறர் ஆதிக்கம் செலுத்துவார்கள் என்று பயப்படுவதையும் மெஜாரிட்டியாயுள்ள ஜனங்கள் பிறர் தம்மை கைவிட்டு விடுவார்கள் என்பதையும் அகற்றப் பார்க்கிறது.

ஹிந்துக்களின் ஆதிக்கம் ஏற்பட்டுவிடும் என்ற பயத்தினால் முஸ்லிம் சகோதரர்கள் சுதந்திரப் போராட்டத்திலிருந்து விலகி நிற்கலாம்; முஸ்லிம்களை நம்பமுடியாது என்ற பயத்தினால் ஹிந்துக்கள் முஸ்லிம்களுடன் ஒன்று சேராதபடி பிரிந்து இருக்கலாம் ஒருவருக்கு சுதந்திரம் என்றால் மற்றொருவருக்கும் சுதந்திரம், இருவருக்கும் திருப்தி அளிக்கக்கூடியது என்ற உணர்ச்சி ஏற்படாத வரையில் இந்நிலைமை நீடிக்கும்.

# II

## இந்திய சுதந்திரத் திட்டம்

மேலே கூறப்பட்ட சுதந்திரக் கொள்கைகளைக் கீழ்க்காணும் உருப்படியான முறையில் உருவாக்க கம்யூனிஸ்டு கட்சி இந்திய மகாஜனங்களுக்கு சமர்ப்பிக்கிறது. இந்தத் திட்டத்திற்கு பரிபூர்ண ஆதரவை கோருகின்றது.

1. பிரிட்டிஷ் சர்க்கார் உடனடியாக இந்திய சுதந்திரத்தை பரிபூர்ண சுதந்திரத்தை—உடனடியாக அங்கீகரிக்க வேண்டும்.

உண்மையான அகில இந்திய அரசியல் நிர்ணய சபைக்கு—போலி சபைக்கல்ல—அதிகாரம் மாற்றப்படவேண்டும். இச்சபை "க்விட் இந்தியா" ஒப்பந்தத்தை நிர்ணயிக்கும். பிரிட்டிஷ் சர்க்கார் இந்த ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும்: இல்லாவிட்டால் எல்லா இந்திய மக்களும் ஒன்றுபட்டு நடத்தும் மாபெரும் போராட்டத்தைச் சமாளிக்கவேண்டும் என்று பிரகடனப்படுத்தவேண்டும்.

2. இந்த அகில இந்திய அரசியல் நிர்ணய சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் பதினேழு பரிபூர்ண அரசுரிமை கொண்ட சபைகளால் தேர்ந்தெடுக்கப்படுவர். பல்வேறு தேசிய இனங்களைக்கொண்ட இந்திய மக்களின் ஒவ்வொரு தேசிய இனமும், அதன் தாயகத்தை அடிப்படையாகக்கொண்டு ஏற்படுத்தப்பட்டதும் பரிபூர்ண அரசுரிமை உடையதுமான பதினேழு அரசியல் நிர்ணய சபைகளால் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். இந்தப் பதினேழு சபைகளும் கீழ்கண்டவைகளாக இருக்கும்—(1) பலுச்சிஸ்தானம், (2) பட்டாணியர் நாடு, (3) சிந்து, (4) மேற்கத்திய பாஞ்சாலம், (5) மத்தியப் பாஞ்சாலம், (6) ஹிந்துஸ்தானம், (7) ராஜஸ்தானம், (8) குஜராத் (கூர்ஜரம்). (9) மஹாராஷ்டிரம், (10) கர்னடகம், (11) ஆந்திரம், (12) கேரளம், (13) தமிழ்நாடு, (14) ஒரிஸ்ஸா, (15) அஸ்ஸாம், (16) வங்காளம் (17) பீஹார் என பதினேழு நாடுகளாகும்.

இந்தப் பதினேழு நாடுகளின் தேசிய அரசியல் நிர்ணய சபைகள் சர்வஜன வாக்குரிமையினால் தேர்ந்தெடுக்கப்பட்ட சபைகளாயிருக்கும்.

3. இந்திய சமஸ்தானங்களிலுள்ள ஜனங்களுக்கும் பரிபூர்ண சுய நிர்ணய உரிமை வழங்கப்படும். இவ்வுரிமை அவர்களுடைய பிறப்புரிமை என்பதுடன், பிரிட்டிஷ் ஆட்சியை ஒழித்து

அதன் ஏஜெண்டுகளான சமஸ்தான மன்னர்களின் முடியாட்சிகளையும் ஒழித்து உண்மையான இந்திய சுதந்திரத்தை நிலைநாட்டும் திட்டத்தின் இன்றியமையாத பகுதியுமாகும்.

இந்த உரிமையை சமஸ்தானப் பிரஜைகள் அனுபவிப்பதன் மூலம் அவர்கள் தங்களுடைய தலைவிதியை தாங்களே நிர்ணயித்துக் கொள்வதற்கு முடியும்; தங்கள் இனத்தைச் சேர்ந்த தங்கள் சகோதரர்களுடன்—பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள சகோதரர்களுடன்—அவர்களுடைய சுதந்திரத் தாயகங்களில் சேர்ந்து வாழ்ந்து வளரமுடியும்.

அகில இந்திய அரசியல் நிர்ணய சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகளுக்குத் தங்களைத் தேர்ந்தெடுத்தவர்களுடைய அபிப்பிராயப்படி நடக்கும் அதிகாரம்தான் இருக்கும். மற்றபடி வேறு விசேஷ அதிகாரம் அவர்களுக்குக் கிடையாது.

பரிபூர்ணமான உண்மை அரசுரிமை, தேசிய அரசியல் நிர்ணய சபைகளைச் சார்ந்தது. அச்சபைகள்தான் சுதந்திர இந்தியாவிலே, சரிசமமான அந்தஸ்துடன் தங்களுக்கும் பிறருக்கும் நிலவவேண்டிய உறவை முடிவாக நிர்ணயிக்க அதிகாரம் பெற்றவையாக இருக்கும்; இதற்கென்று எவ்வித தங்கு தடையின்றி பேச்சுவார்த்தைகளை நடத்தி, தங்கள் யோசனைகளை நிர்ணயிக்கும் அதிகாரமும் அச்சபைகளுடையதே.

சுதந்திர இந்தியாவின் அரசியல் அமைப்பை எழுப்பிக் கட்டும் பொறுப்பு—முடிவான பொறுப்பு அச்சபைகளுடையது. தாங்கள் ஏற்படுத்திய சூழ்நிலையிலே, தங்கள் நலத்திற்கும் பொது நலத்திற்கும் உகந்தது என்று அவர்கள் கருதுவதற்குத் தக்கபடி தங்கள் சுதந்திர விருப்பத்திற்கேற்றபடி இந்த அரசியல் அமைப்பை ஏற்படுத்துவார்கள்.

- சீக்கியர்களுக்குக் கம்யூனிஸ்டு கட்சி கீழ்காணும் உத்திரவாதத்தை கொடுக்கிறது. அவர்களுடைய சரித்திர பூர்வமான தாயகமிருக்கும் பிரதேசத்திலே அங்குள்ள மற்றஜனங்களுடன் அவர்களும் தங்கள் சுய நிர்ணய உரிமையை அனுபவிக்க முடியும் என்று கூறுகிறது.

- சுதந்திர இந்தியாவில், ஒன்றுபட்ட சுதந்திர வங்காளம் வேண்டும் என்று கம்யூனிஸ்டு கட்சி பாடுபடுகின்றது. வங்க ஹிந்துக்களுக்கும் வங்க முஸ்லிம்களுக்கும் பொதுவாயுள்ள தாயகம் வங்க பூமி. அங்கே சர்வஜன ஓட்டுரிமையினால் தேர்ந்தெடுக்கப்பட்ட பரிபூர்ண அரசுரிமை வாய்ந்த அரசியல்

நிர்ணய சபையின்மூலம் அவர்கள் தங்கள் சுய நிர்ணய உரிமையை உபயோகித்து, இந்தியாவின் இதர பகுதிகளுடன் எத்தகைய உறவு நிலவவேண்டும் என்பதை முடிவு செய்வதற்கு சுதந்திரம் அளிக்கப்படவேண்டும்,

## ஜனங்கள் முடிவு செய்யட்டும்

எங்கள் கட்சி காண்பிக்கும் வழியிலே எந்தக் கட்சி யோஜனையும் நிறைவேற இடமுண்டு. நாங்கள் சொல்லும் முறை எந்த யோஜனையையும் முன்னதாகவே தடுத்துவிடும் வழியல்ல.

முஸ்லிம்கள் பெரும்பான்மையாக வாழுமிடங்களில் பரிபூர்ண அரசுரிமை உடைய ஒரு பெடரேஷனை அமைத்து, ஹிந்து மெஜாரிட்டி பிரதேசங்கள் சேர்ந்து அமைத்துக் கொள்ளும் பெடரேஷனுடன் நட்புறவு ஏற்படுத்திக் கொள்ளலாம்; பொதுவான இந்திய யூனியனில் இருக்கவேண்டிய அவசியமில்லை என்ற யோஜனையைப் பரப்பி ஆதரவு தேடி தங்கள் லட்சியத்தை அடைவதற்கு லீகுக்கு சுதந்திரம் கிடைக்கும்.

பரிபூர்ண சுயாட்சியுடன்—ஆனால் பூர்ண அரசுரிமை இல்லாத—ஒரு இந்திய யூனியனுக்கு, பெடரல் முறையில் ஏற்படுத்தப்பட்ட இந்திய யூனியனுக்குப் பிரசாரம் செய்து அடைவதற்கு காங்கிரஸுக்கு சுதந்திரம் கிடைக்கும்.

தங்கள் அரசாங்கங்களில் பூர்ண ஜனநாயகத்தை அளித்து, பரஸ்பர உதவிபளிக்கும் முறையில் பரிபூர்ண அரசுரிமைஉடைய தேசிய அரசாங்கங்கள், தாமாகவே ஒரு யூனியனை ஸ்தாபிதம் செய்யவேண்டும் என்று பிரசாரம்செய்து அத்தகைய இந்திய யூனியனை ஏற்படுத்த எங்கள் கட்சிக்கு சுதந்திரம் இருக்கும். பொதுவாயுள்ள பெடரல் மத்திய அமைப்பானது முற்போக்கடைந்த பகுதிகள் அவ்வளவு வளர்ச்சியடையாத பிரதேசங்களுக்கு உதவி அளிப்பதற்கு இடமளிக்கும்.

இந்த யோஜனைக்கு ஒரே ஒரு நிபந்தனைதான். இனி எந்தக் கட்சியின் யோஜனையும் ஏற்கப்பட வேண்டுமென்றால், ஜனங்கள் அதை ஆதரிக்கவேண்டும். மக்களிடம் திட்டவட்டமான ஆதரவைப் பெற்றுள்ள இந்திய அரசியல் கட்சிகளுக்குள் அபிப்பிராய பேதம் ஏற்பட்டால் அவற்றைத் தீர்த்துக்கொள்வதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு—அவர்களுக்கிடையில் பேச்சு வார்த்தைகள்—ஒரு முடிவுக்கு வர வேண்டுமென்ற பொறுப்பை உணர்ந்து நடத்தப்படும் பேச்சுவார்த்தைகள்—நமக்கிடையில் நீடிக்கும் நிரந்தரமான ஒப்பந்தத்திற்கு வந்து, சுதந்திரத்திற்கான இறுதிப் போராட்

டத்தை ஆரம்பிக்க வேண்டுமென்ற உறுதியுடன் நடத்தப்படும் பேச்சு வார்த்தைகள்தான் வழி.

## கேட்டை விளைவிக்கும் பிரமைகள்

இந்த நியாயமானவழியிலே நமது வித்தியாசங்களைத் தீர்த்துக் கொள்வதற்குப் பதிலாக, நமது மாபெரும் அரசியல் கட்சிகளின் தலைவர்கள் ஒரு சாரார் மற்றொரு சாராருடைய கோரிக்கைகளை மறுத்துக்கொண்டு நிற்கின்றனர்; பிரிட்டிஷாருடன் சமரஸத்துக்கு வருவது தங்களுக்குள்ளே சமரஸத்துக்கு வருவதைவிட எளிதான சமாசாரம் என்று எண்ணிக்கொண்டிருக்கின்றனர் என்று கம்யூனிஸ்ட் கட்சி அனைவருக்கும் எச்சரிக்கை செய்கின்றது.

நம் அரசியல் கட்சிகள் ஒவ்வொன்றும் தங்கள் பின்னுலுள்ள பலத்தைக்கண்டு பிரிட்டிஷ் சர்க்கார் தங்களுக்குச் செவிசாய்க்கும் என்று புலம்புகின்றது. தன்னுடைய சகோதரனிடம் நம்பிக்கையில்லை, தன் வாதத்திலுள்ள தவறை ஒருவரும் உணரவில்லை— இந்த மாதிரிப் போய்க்கொண்டிருப்பதால் பிரிட்டிஷாருக்குச் சாதகமாயிருக்கின்றது; ஒரு கட்சியும் தன்னுடைய லட்சியத்தை அடைவதற்கு முடியவில்லை.

அரசியல் சட்டத்தை அமைக்கும் சபையிலும், முன்பு சிம்லாவில் நடந்ததைப்போலவே, எப்பொழுதும் நடந்துவருவதைப் போலவே இதே நெருக்கடி ஏற்படும்.

இந்தியத் தலைவர்கள் தாங்களாகவே தங்கள் பிரச்னைகளைத் தீர்த்துக்கொள்ள இயலாது, பிரிட்டிஷார் ஒரு தீர்ப்பளிப்பதற்கு பிரச்னை அவர்களிடம் போய்ச்சேரும். அவர்கள் தங்களுக்குச் சாதகமான ஒரு முடிவை நாமனைவரும் ஒருவரை யொருவர் பகைத்துக்கொண்டு, முன்னிலும் அதிகமாக வெறுத்துக்கொண்டு நிற்கும் நிலைமையில் கொண்டுபோய்விடும் தீர்ப்பை அளிப்பார்கள்—கடந்த 25 வருஷ காலமாக இந்திய அரசியல் பிரச்னை முடிவுக்கு வந்த பொழுதெல்லாம் இது நடந்திருக்கிறது,

காங்கிரஸும் லீகும் ஒன்றுக்கொன்று முரணான யோசனைகளைக் கூறும் நெருக்கடியினின்று நாம் மீளுவதற்குகந்த ஒரு யோசனையை கம்யூனிஸ்ட் கட்சி கூறுகின்றது. இந்த யோசனை ஜனநாயகக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டது; இந்தியருடையப் பண்புக் கேற்றது; முடிவானது, முக்கியமான பிரச்னைகளைத் தீர்க்கக்கூடியது.

## பரிபூரண அரசுரிமையை மீண்டும் வழங்குக

பிரிட்டிஷ் படையெடுப்புக்கு முன்னல், பிரிட்டிஷார் வந்து நம்மைப் பிரித்துச் சீர்குலேத்ததற்கு முன்னல், தங்களுக்கு இயல்பாக அமைந்த புராதனத்தாயகங்களில் இந்தியர் வாழ்ந்து வந்ததற்கு ஏற்றபடி இந்திய மக்களுக்கு பரிபூர்ண அரசுரிமையை வழங்கவேண்டும் என்று கம்யூனிஸ்டு கட்சி கூறுகின்றது.

"ஜனங்கள்" 'தேசிய இனங்கள்' என்பது பலபேர் சேர்ந்த ஒரு கூட்டமல்ல; மனதில் தோன்றும் ஓர் எண்ணம் அல்ல. அவர்கள் தங்களுடைய தாயகங்களில் வசிக்கின்றனர்; தங்களுடைய பாஷை அபிவிருத்தி யடைந்த தாயகங்களில் வசிக்கின்றனர்; அங்கே தங்களுடைய வாழ்க்கையை மாற்றிக்கொள்வதற்கு முயற்சிக்கின்றனர்; தங்கள் கலாச்சாரத்தை வளர்க்கின்றனர்; தங்களுக்கிஷ்டமான வாழ்க்கையை நடத்துகின்றனர்; தங்கள் எதிர்கால வாழ்க்கையை—தலேவிதியை தாங்களே அமைத்துக் கொள்கின்றனர்.

சுதந்திர இந்தியாவில் சுதந்திரத் தாயகங்கள் என்ற கோஷத்தின் மூலம் கம்யூனிஸ்ட் கட்சி இந்நாட்டின், நாட்டுமக்களின் இயல்புக்கேற்ற ஒரு முடிவை சமர்ப்பிக்கிறது. அந்த யோசனையை அமுலுக்குக் கொண்டுவந்தால் எல்லா மக்களும் தங்களுடைய விருப்பப்படி தங்கு தடையின்றி வளர்ச்சி அடைவதற்கு முடியும்.

ஜனங்களுக்கு ஏற்கனவே யிருந்ததும், இருக்க வேண்டியதுமான—தாயகங்களில் பரிபூர்ண அரசுரிமை—என்பதை மீண்டும் அவர்களுக்கு வழங்குவதால் இத்தகைய வளர்ச்சிக்கு கம்யூனிஸ்ட் கட்சியின் யோசனே உதவும்,

நம்முடைய நாட்டு மண்ணுக்கு ஏற்றதாக, நமது பண்பினின்று மலரும் இந்திய ஜனநாயகத்தை சிருஷ்டிப்பதே கம்யூனிஸ்ட் கட்சியின் நோக்கம். நமது தேசிய இனங்களின் தாயகங்களிலிருந்து, அங்கே வசிக்கும் நமது மக்களின் மூலமே இந்திய ஜனநாயகம் உருவெடுக்க வேண்டும். சகோதர ஸௌஜன்யத்துடன் நாம் இந்தியாவை மாபெரும் தேசமாக, சுதந்திர தேசிய இனங்களே உடைய பெரும் குடும்பமாக விளங்கச் செய்வதற்கு இதுவே வழி.

இதைவிட உயர்வான உன்னதமான லட்சியம் கிடையாது. நம் முன்னேர்கள் இழந்த நமது நாட்டின் சம்பத்தை நாம் அடைவதற்கு நடத்தும் போராட்டம் இது. அந்த சம்பத்தை மீட்டு

அதைச் செழிக்கச் செய்து நமது சந்ததிகளுக்கு மாபெரும் ஆஸ்தியாக அளிப்பதற்கு வழி தேடும் போராட்டம் இது.

## நியாயம் மட்டுமே—ஜீவாதாரத் தேவை

இந்திய மக்கள் இன்று எப்படி எந்த நிலையில் இருக்கின்றனரோ அதையே அடிப்படையாகக் கொண்டுள்ள யோஜனை இது தன்னுடைய தாயகத்தின் எதிர்கால வாழ்க்கையை, அந்தஸ்தை, சுதந்திர இந்தியாவில் அதற்கு இருக்கவேண்டிய ஸ்தானத்தை, வயதுவந்த ஒவ்வொரு ஆணும் பெண்ணும் முடிவுசெய்ய உரிமை ஏற்படுகிறது. இதைவிட நியாயமான முடிவு இருக்கமுடியாது.

கம்யூனிஸ்ட் கட்சியின் யோஜனை களங்கமற்ற நியாயத்தை ஆதாரமாகக் கொண்டது. நிர்ணய உரிமையின் விஞ்ஞான பூர்வமான கொள்கைகளை அஸ்திவாரமாகக்கொண்டது, இந்தியர்களுடைய சகோதரத்வத்திலே அழியாத நம்பிக்கைகொண்டது. இந்தியாவின் சுதந்திரம் இந்தியாவிலுள்ள சகல மக்களுக்கும் சுதந்திரமென்று மலரவேண்டும் என்ற ஒரே நோக்கம்கொண்டது எங்களுடைய யோஜனை.

ஒவ்வொரு இந்தியனும் ஒருவருக்கொருவர் நியாயம் வழங்கும் வழி இதுதான் என்று காண்பான் என்று நம்புகிறது; நம்மை அடிமைப் படுத்தும் பிரிட்டிஷ் யஜமானர்களை எதிர்த்து, இந்திய சுதந்திரத்துக்கான இறுதிப் போராட்டத்திற்காக எல்லா இந்தியர்களையும் ஒன்றுபடுத்தும் வழியும் இதுதான்.

சுதந்திர இந்தியாவில் சுதந்திரத்தாயகங்கள் என்ற காட்சியை கம்யூனிஸ்ட் கட்சி ஒவ்வொரு இந்தியனுடைய கண்ணின் முன்னால் காட்டுகிறது.

நமக்குள்ளே நியாயம் வழங்கவேண்டுமென்றவுடன் உள்ளம் பூரிக்கும் ஒவ்வொரு இந்தியனுக்கும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடுவோம் என்ற கோஷத்தைக் கேட்க உள்ளம் துடித்துக்கொண்டிருக்கும். ஒவ்வொரு இந்தியனுக்கும் கம்யூனிஸ்டு கட்சி

> "எல்லோரும் ஒன்றென்று அனைவரும் திரளுவோம்,
> தனி ஒருவனுக் கென்றும் எல்லோரும் திரளுவோமே".

என்ற கோஷத்தைச் சமர்ப்பிக்கிறது. நம்மிடையேயுள்ள வித்தியாசங்களை அகற்ற கம்யூனிஸ்ட்கட்சி அதிதீவிரமாகப் பாடுபடுகின்றது. பிரிட்டிஷ் ஆளும் வர்க்கத்தினர் நம்மீது சுமத்தப் பார்க்

கும் புதிய அடிமைத் திட்டத்தை ஏற்கும் அவமானத்தை தவிர்க்க கம்யூனிஸ்டு கட்சி இடையருது பாடுபடுகின்றது.

இன்று கம்யூனிஸ்டு கட்சியின் ஒரே நோக்கம்—இந்தியாவின் விடுதலைக்கான இறுதிப் போராட்டத்திற்காக சுதந்திரப் பிரியர்களான சகல இந்தியர்களேயும் திரட்டுவதே.

## III

## சுதந்திர இந்தியாவிலே
## சுதந்திர நகரங்களுக்காக

தொழில் வளர்ச்சி அடையவொட்டாமல் நம் நாட்டை ஒரு தாழ்த்தப்பட்ட நாடாக பிரிட்டிஷ் ஆளும் வர்க்கத்தினர் வைத்திருந்தனர்.

கடந்த ஆறு வருட யுத்த காலத்தில், தேசத்திற்கு மிகப் பெரிய நெருக்கடி ஏற்பட்ட காலத்தில் இந்தியமுதலாளிகள் லாபக் கொள்ளேக்காரர்களானுர்கள். ஆலை முதலாளிகளும் வர்த்தகர்களும் கள்ளமார்க்கெட்காரர்களானுர்கள், நம் நாட்டு மக்களின் நலன்களேப் புறக்கணித்துத் தங்கள் சுயநல வேட்டையையாடினர்.

லாபப் பேராசைதான் அவர்களே அசைய வைத்தது.

அவர்களுடைய சொந்த நாட்டு மக்களின் உழைப்பைச் சுரண்டிக் கொழுத்தனர். மக்களுடைய அன்றுடத் தேவைகளேத் திருப்தி செய்ய மறுத்தனர்;

இந்திய முதலாளிகளின் கையிலே நம் நாட்டின் எதிர்காலத்தை விட்டு வைப்பது மிகப் பெரிய பாதகமாகும். சுதந்திர இந்தியாவில் மட்டுமல்ல, இன்றே இனி ஒரு நாளேக்கேனும் அவர்களிடம் நாட்டின் விதியை விட்டு வைப்பது குற்றமாகும்.

யுத்த பிற்காலத்தில் ஏற்படப்போகும் மிக பயங்கரமான நெருக்கடி நம்மை எதிர்நோக்கி நிற்கிறது. ஐம்பது லக்ஷம் ஜனங்களுக்கு—சர்க்காரின் கணக்குப்படியே வங்கப் பஞ்சத்தில் மடிந்த எண்ணிக்கையைப்போல் 5 மடங்கு நபர்களுக்கு—வேலையில்லாத் திட்டாட்டம் ஏற்படக்கூடும். தொழிலாளர் குடும்பம் ஒவ்வொன்றும், மத்தியதர வர்க்கத்தின் குடும்பம் ஒவ்வொன்றும் கிடுகிடுத்துப் போய் ஆட்டங்கொடுக்கும் நிலைமை நம்மைப் பயமுறுத்துகிறது.

கண்யமான இந்தியரனைவருடைய கவனத்தையும் கம்யூனிஸ்டு கட்சி இந்த முறையில் திருப்ப முயற்சிக்கின்றது. ஆலைத் தொழிலாளிகள், நகரத்தில் ஜீவிக்கும் மத்தியதர வர்க்கத்தினர் ஆகியோர்—லாபக் கொள்ளையை விரும்பும் இந்திய முதலாளிகளின் கோரச் செய்கைகளையும், ரகஸ்ய சூழ்ச்சிகளையும் கவனிக்கும்படி முயற்சி செய்கிறது.

இந்நாட்டின் அரசியல் தலைவர்கள் தங்களுக்குள்ளே பரஸ்பர நம்பிக்கை ஏற்படுத்துவதற்குப் பதிலாக, பிரிட்டிஷ் ஆளும் வர்க்கத்தினரைப் பார்த்துக்கொண்டு நிற்கின்றனர். அதுபோலவே தொழில் முதலாளிகள் பிரிட்டிஷ் வர்த்தக முதலாளிகளுடன், மாபெரும் தொழில் முதலாளிகளுடன் ஒப்பந்தக்களை ஏற்படுத்திக் கொண்டு, அவர்களுடன் தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு வருகின்றனர். பிர்லாக்களுக்கும், நப்பீல்டுக்கும் (பெரிய மோட்டார் முதலாளிக்கும்) ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டு விட்டது; டாடா கம்பெனிக்கும் இம்பீரியல் கெமிகல் கம்பெனிக்கும் ஒப்பந்தம் ஏற்பட்டு விட்டது. இம்பீரியல் கெமிகல் கம்பெனிதான் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் ஏகபோக உரிமைபெற்ற கெமிகல் (ரஸாயனப் பொருள்) கம்பெனி.

இன்னும் பற்பல ஒப்பந்தங்களுக்குத் திரைமறைவில் ரகஸ்யமான பேச்சுவார்த்தைகள் நடைபெற்று வருகின்றன. ஆனால் அவை இன்னும் வெளியாகவில்லை.

(2) தங்கள் பணமூட்டைகளையே நேசிக்கும் இப்பிறவிகள், தங்கள் நாட்டு மக்களின் ரத்தத்தை உறிஞ்சும் இக்கொடியர்கள் இன்று இந்நாட்டின் பிரதான கட்சிகளாகிய காங்கிரஸுக்குள்ளேயும், லீகிற்குள்ளேயும் புகுந்துகொள்ளுகின்றனர். பொதுஜன மந்திரி சபைகள் ஏற்பட்டவுடன் தங்களுடைய நலவுரிமைகளைக் காப்பாற்றிக் கொள்ள அவர்கள் இந்த வழியைத் தேடுகின்றனர்.

ஒருபுறம் தங்கள் நாட்டின் பொருளாதாரத்தின் எதிர்காலத்தை அவர்கள் பிரிட்டிஷ் வர்த்தக முதலாளிகளின் பெரும் புள்ளிகளிடம் விற்று விடுகின்றனர்; மறுபுறத்தில் தங்கள் அநியாயக் கொள்ளைகளைக் காப்பாற்றிக் கொள்வதற்காக நம் தேசபக்தி வாய்ந்த தேசிய ஸ்தாபனங்களின் ஆதரவாளர்களாகவும் அங்கத்தினர்களாகவும் பார்க்கின்றனர்.

இந்தப் பேரபாயத்தை உணர்ந்திருப்பது கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான். அவர்களை அம்பலப்படுத்தி பொதுமக்களின் சார்பில் போராட உறுதிகொண்ட கட்சி கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான்.

## தொழில் புனரமைப்புக்கு அடிப்படையான கொள்கைகள்

கீழ்க்காணும் கொள்கைகளை அஸ்திவாரமாகக் கொண்டு, பொதுஜன அரசாங்கத்தின் நேரடியான வழிகாட்டுதலின் கீழே இந்தியா அதிசீக்கிரத்தில் தொழில் வளர்ச்சி அடையவேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி கூறுகிறது.

(1) கெமிகல், இரும்பு, எஃகு, நிலக்கரி போன்ற தொழில்களை சர்க்காரே எடுத்து நடத்தும் தேசிய அரசாங்கத் தொழில்களாக்க வேண்டும்.

(2) முக்கியமான தொழில்களனைத்தையும் 'கண்ட்ரோலு'க்கு உட்படுத்த வேண்டும்.

(3) இந்தியத் தாயகங்களிலெல்லாம் திட்டமிடப்பட்ட, தொழில் வளர்ச்சி—ஒத்தாற்போல் அபிவிருத்தி அடையும் தொழில் வளர்ச்சி.

(4) ஒவ்வொரு தாயகத்திலும் குறைந்தபட்ச அளவுக்கேனும் வளர்ச்சி அடைவதற்கான முறையில் குடிசைத் தொழில்களுக்கும், பெரிய ஆலைத் தொழில்களுக்கும் ஒரு தொடர்பைத் திட்டமிடவேண்டும்.

(5) தேசத்தின் மூலதனத்தை அபிவிருத்தி செய்யக்கூடிய செல்வத்தைக் கண்ட்ரோலுக்குட்படுத்த வேண்டும்; பொதுஜன அரசாங்கம் தேசமுன்னேற்றத்துக்கும், பொதுஜன நலன் அபிவிருத்தி அடைவதற்கும் திட்டமிடுவதற்கு ஏற்றபடி மூலதனத்தை அபிவிருத்தி செய்யக்கூடிய செல்வத்தை கண்ட்ரோல் செய்ய வேண்டும்.

(6) அரசாங்கம், ஆலை நிர்வாகம், தொழிலாளிகள்—ஆகிய மூவரும் சேர்ந்து சுதந்திரமாக சரிசமமான அந்தஸ்துடன் ஒத்துழைத்து பொதுஜன அரசாங்கத்தின் உடனடி திட்டத்தையும், நீண்டகாலத் திட்டத்தையும் அமுலுக்குக் கொண்டு வரவேண்டும்.

## உடனடியாக செய்யவேண்டியவற்றிற்கு யோஜனைகள்

பொதுஜன மந்திரி சபைகள் நிர்வாக அதிகாரத்தைப் பிரயோகித்துக் கீழ்காணும் உடனடியானயோஜனைகளை நிறைவேற்ற வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி இடைவிடாது பிரசாரம் செய்து, அவற்றிற்காகப் போராடும்.

கீழ்காணும் திட்டங்களை நிறைவேற்றுவதற்கு லாபக்கொள்ளைக்காரர்கள் ஏற்படுத்தும் தடைகளைத் தகர்க்க பொதுஜன அவ

சரச் சட்டங்களைப் பிரயோகிக்க வேண்டுமென்று கம்யூனிஸ்டு அங்கத்தினர்கள் போராடுவார்கள்.

(1) ஆள்குறைப்புக் கூடாது, எல்லோருக்கும் வேலை கொடுக்க வேண்டும்.

(2) சம்பள வெட்டுக்கூடாது, தொழிலாளிகளுக்கு அந்தஸ்தான கூலி கொடுக்கவேண்டும்.

(3) வாரத்திற்கு 44 மணி நேரம்தான் வேலைவாங்கவேண்டும் தினசரி 8 மணி நேரம்தான்.

(4) தொழிற்சங்கங்களை உடனடியாக அங்கீகரிக்கவேண்டும்.

(5) வேலைநிறுத்தம் செய்யும் உரிமையை ஏற்கவேண்டும்.

(6) வருடத்திற்கு ஒரு மாதம் சம்பளத்துடன் லீவு.

(7) வயோதிகர்களுக்கு வயோதிகப் பென்ஷன்.

(8) பெண் தொழிலாளிகளுக்கு பிரசவ உதவி.

(9) எல்லாக் குழந்தைகளுக்கும் இலவசமாக ஆரம்பக்கல்வி.

(10) எல்லா யுவர்களுக்கும் நல்லமுறையில் அமைக்கப்பட்ட டிரேட் பள்ளிக்கூடங்கள்.

(11) எல்லா குடும்பங்களுக்கும் மலிவான வாடகையில் நல்ல வீட்டு வசதி.

(12) வியாதிக்காரர்களனைவருக்கும் இலவச வைத்திய உதவி அளிக்கும் ஆஸ்பத்திரிகள்.

தேசிய அரசாங்கமே எடுத்துக்கொண்டு தொழில்களை நடத்தி மூலதன அபிவிருத்தி செய்யும் செல்வம் கொழிப்பதற்கு முன்னர் பொதுஜன அரசாங்கத்திற்கு வேண்டிய வசதிகளை—பொருளாதார, நிதி—திரட்டுவதற்காக, கீழ்காணும் நடவடிக்கைகளைப் பொதுஜன அரசாங்கங்கள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கம்யூனிஸ்டு கட்சி வவற்புறுத்தும்.

(1) தொழிலாளிகளுடைய ஒத்துழைப்பைப் பெற்று, யுத்த காலத் தொழில்களை சமாதான காலத்தேவைகளைப் பூர்த்தி செய்யும் தொழில்களாக மாற்றி அமைக்க வேண்டும்.

(2) இந்தியாவின் ஸ்டர்லிங் நிதியை பிரிட்டிஷ் சர்க்கார் திருப்பிக்கொடுக்க மறுப்பதால், பிரிட்டிஷ் மூலதனம் போடப்பட்டுள்ள தேயிலைத் தோட்டங்களையும் வர்த்தகக் கம்பெனிகளையும், பிரிட்டிஷ் மூலதனத்தையும் பொதுஜன அரசாங்கம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

(3) லாபக்கொள்ளையடித்த முதலாளிகளின் அமிதலாப வரி 'ரிஸர்வ்' தொகையைத் திருப்பிக்கொடுக்கக்கூடாது (நிகர் லாபத்தில் 80 சதம் சர்க்கார் அமிதலாப வரியாக எடுத்துக்கொண்டது, மீதமுள்ள லாபத்தில் ரூபாய்க்கு 0-4-9வை அமிதலாப வரி ரிஸர்வாக எடுத்துக்கொண்டு, யுத்த முடிவில் 2 சத வட்டியுடனும் சர்க்கார் கொடுக்கும் தொகையாக 6 2/3 சதமும் திருப்பிக்கொடுப்பதாகக் கூறப்பட்டது இந்தத் தொகையைத்தான் திருப்பிக் கொடுக்கக்கூடாது என்கிறோம்.)

(4) யுத்த காலத்தில் லாபம் சம்பாதித்தவர்களின் சட்ட விரோதமான லாபத் தொகையை ஜப்தி செய்யவேண்டும். அதைப்பற்றி வெளிப்படையாக பாரபக்ஷமற்ற கமிட்டிகள் முன் உடனடியாக விசாரணை நடத்தி, அத்தொகையை பொதுஜன நலன்களுக்காகப் பயன்படுத்தவேண்டும்.

இந்த நடவடிக்கைகளை நிறைவேற்றுவதில் ஏற்படும் எந்தவிதமான தடைகளையும், சட்டநுணுக்கத்தினாலும், பிற்போக்கு வாதி ஏற்படுத்திவிடும் தடைகளைத் தகர்க்க பொதுஜன அவசரச் சட்டங்களைப் பிரயோகிக்கவேண்டுமென்று கம்யூனிஸ்டு கட்சி போராடும். நம் நாட்டின் எதிரிகளை, நமது மக்களின் எதிரிகளை அடக்குவதற்கு இந்தப் பொதுஜன அவசர நடவடிக்கைகள் அவசியம் என்று கம்யூனிஸ்டு கட்சி இடையறாது போராடும்.

## முறையும் நோக்கமும்

- நம் நகரங்களைப் பீடிக்கும் லாபக்கொள்ளைக் கூட்டத்தையும் பதுக்கல் கும்பலையும் விரட்டியடித்து அவற்றைப் புனிதப் படுத்தவேண்டும்.
- பொதுஜனத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் நோக்கத்துடன் நமது பொருளாதார அமைப்பை நிறுவவேண்டும்.
- சுதந்திர சுபிட்ச இந்தியாவில் சுதந்திர சுபிட்ச நகரங்களாக நமது நகரங்கள் ஆவதற்கு வேண்டிய வகையில் அவற்றை மாற்றி அமைக்கப் போராடவேண்டும்.

இந்த திட்டத்திற்காக செங்கொடிக் கட்சி தொழிலாளி வர்க்கம் முழுவதையும் திரட்டும்.

நடுத்தர வர்க்கத்தின் பரிபூர்ண ஒத்துழைப்பையும் நெருங்கிய தொடர்பையும் பெற்று தொழிலாளி-மத்தியதரவர்க்க நேசத்திற்காக கம்யூனிஸ்டு கட்சி பாடுபடும்.

இத்தகைய ஒத்துழைப்பின் மூலம்தான் பாடுபட்டுவாழும் இவ்விரு ஜனங்பகுதிகளும் தங்கள் பொதுவான நலனுக்காகப் பொது எதிரியை—நம் எதிர்காலப் பொருளாதாரத்தை ஏகபோக உரிமை பெற்ற பிரிட்டிஷ் முதலாளிகளிடம் அடமானம் வைத்து நமது மக்களின் கண்ணில் பொடிபோட நம் பொதுஜன ஸ்தாபனங்களுக்குள் நுழையப்பார்க்கும் இந்த முதலாளிகளை—எதிர்த்துப் போராடமுடியும்.

தொழிலாளிகளே! மத்தியதர வர்க்கத்துப் படிப்பாளிகளே! இந்தியத் தொழில்களை இறுகப் பிடித்துவைக்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியப் பிடிப்பை எதிர்த்து ஒன்ருய் நிற்போம்!

பிரிட்டிஷ் ஏகபோக உரிமைக்காரர்களும் இந்திய முதலாளிகளும் சேர்ந்து செய்யும் சதியைச் சுக்குநூருக்க ஒன்ருய் நிற்போம்!

லாபப் பேராசை பிடித்து நிற்கும் முதலாளிகளை அடக்க நிற்போம்!

சுதந்திர இந்தியாவில் சுதந்திர நகரங்களை ஸ்தாபிக்க ஒன்ருய் நிற்போம்!

கீர்த்திவாய்ந்த நமது புராதன நாட்டிலே புதிய நகரங்களை, வளர்ந்து செழிக்கும் நகரங்களை, புதிய வாழ்க்கை மணம் வீசும் நகரங்களை, சமூகத்திற்குப் பயன்படும் பணியை அனைவரும் செய்யும் நகரங்களை, அனைவரும் நாகரீக வாழ்க்கை நடத்தும் நகரங்களைச் சிருஷ்டித்த, மலரவைக்கும் பாதை இதுதான்.

## IV

## சுதந்திர இந்தியாவில் சுதந்திர கிராமங்கள்

நம்முடைய புராதனக் கிராம சமுதாயத்தின்மீது ஜமீன்தாரி முறையைப் பிரிட்டிஷ் படையெடுப்பு சுமத்தியது. அதன் மீது தன்னுடைய முதலாளித்வத்தையும் ஏற்படுத்தியது பிரிட்டிஷ் சூழ்ச்சி.

இந்தியாவை கசக்கிப் பிழிவதற்காக ஒவ்வொரு கிராமத்திலும் மூன்று அட்டைகளை விட்டனர். ஒன்று வீண்பொழுது போக்கும் ஜமீன்தார். கிராமப் பொருளாதாரத்திற்கு உதவாத வெட்டிச்சின்னம் அவன், ஏகாதிபத்தியத்தின் தாசானுதாசன் அவன். கிராம வாழ்க்கையைச் சீர்குலைக்கும் கோடாரிக்காம்பு

அவன். இரண்டாவது பேர்வழி வட்டிக்குவட்டி வாங்கும் லேவா தேவிக்காரன், விவசாயிகளின் நிலத்தைப் பிடுங்கிக்கொண்டு அவர்களை அடிமைப்படுத்தும் முறையின் சின்னம் அவன்; எதிர் கால வாழ்க்கையைத் தன் கையிலே அடக்கி ஆளும் நிகழ்காலப் பீடை அவன். மூன்றுவது பேர்வழி தந்திரமாய் சரக்குப் பிடிக் கும் வர்த்தகன். தனக்கு வேண்டிய பொருளைச் சரஸமான விலைக்கு வாங்குவதில் கை தேர்ந்தவன் அவன். கிராமவாசிக்கு வேண்டிய பொருள்களை நகரங்களிலிருந்து வாங்கி வந்து அதிகப் படியான விலைக்கு விற்கும் நிபுணன் அவன்.

கிராம வாழ்க்கையைப் பிடித்து, அதன் இரத்த ஓட்டத்தில் ஒட்டிக்கொண்டிருக்கும் இம்மூன்று அட்டைகளுக்குப் பிரிட்டிஷ் அதிகார அமைப்பு—சட்டம், போலீஸ், நீதிமன்றங்கள் ஆகியவை களடங்கிய நிர்வாக அமைப்பு பக்கபலமாக நிற்கிறது. இந்த அட்டைகளைப் பாதுகாப்பதும் அதுதான், இவை அனைத்துமா கச் சேர்ந்து நம்முடைய கிராமங்களைச் சீரழித்துவிட்டன. கிராம ஜனத்தொகையில் மூன்றிலொரு பங்கிலிருந்து அரைவாசிப் பேர் வரையில் நிலமிழந்த ஓட்டாண்டிகளாக்கி விட்டன. உணவுப் பொருள் உற்பத்தி குறைந்துவரும் நிலைமையைச் சிருஷ்டித்து விட்டன. நம் முன்னோர் பாடிய வளம் நிறைந்த பொன் களத்தை நாமனைவரும் அவதியுறும் பஞ்சப் பிரதேசமாக்கி விட் டன.

வங்கப் பஞ்சம் திடீரெனப் பீரிட்டுக் கிளம்பிய பஞ்சமல்ல. பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ் இரத்தத்தை உறிஞ்சும் இந்த மூன்று அட்டைகளின் உறிஞ்சலினால் நமது அன்றாட வாழ்க்கை க்ஷீணித்து வருவதின் பலனே அது.

இம்மூவரும்தான் கிராம வாழ்க்கையை அடக்கி அமுக்கிக் கொண்டுவருகின்றனர்; கிராமங்களை அயல்நாட்டு மார்க்கெட்டு களுடன் பிணைப்பது—பிரிட்டிஷ் யஜமான்களின், பிரிட்டிஷ் பண முதலாளிகளின் நலனுக்குகந்தவகையில் பிணைப்பது—அவர்கள் தான். தங்கள் ஈன வாழ்க்கையை, பேராசைப் பேயை, சுக போகத்தைப் பெருக்கிக் கொள்வதற்காக, போஷிப்பதற்காக, தங் கள் சுயநலத்திற்காக அவர்கள் அவ்வாறு நடக்கின்றனர்.

யுத்த காலத்தில் நிலம் பிடுங்கப்பட்டது, தானியம் பதுக்கப் பட்டது. என்றுமே கண்டிராத கேட்டிராத அளவுக்கும் பதுக்கப் பட்டது. இந்த அட்டைகள் கொழுத்தனர். பலம் பெற்றனர். லஞ்சம் தந்தனர். அதன்மூலம் பிரிட்டிஷ் சர்க்காரின் அதிகாரி களை கைக்குள் போட்டுக்கொண்டனர். கிராம மனைத்தும் அவர் களை அண்டி வாழவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது.

## இன்று அடிமைகளின் கிராமம்

எந்த விவசாயின் மண்ணும் அவனுடையதல்ல; அவனுடையது என்ற உறுதி அவனுக்குக் கிடையாது.

தன் விளைபொருளுக்கு என்ன விலை கிடைக்கும் என்பதை எந்த விவசாயிம் அறியமாட்டான்; அடுத்த வருஷம் எப்படிக் காலம் நடத்துவது என்பதும் அவனுக்குத் தெரியாது.

தன்னுடைய பெண்களின் கற்பு எத்தனை நாட்களுக்குக் காக்கப்படும் என்பதை எந்த விவசாயத் தாயும் அறியாள். இந்த அட்டைகளின், மூர்க்கர்களின் கைக்கூலிகள் எந்த நிமிடத்திலும் அதை உடைத்துவிடக்கூடும்.

நல்ல கல்விப் பயிற்சி கிடைத்து, தனக்கென்று உருப்படியான வேலை செய்ய எந்த விவசாய வாலிபனுக்கும் வழியில்லை.

இந்தியாவின் கிராமங்களிலே இருள்சூழ்ந்திருக்கிறது. நாசம் பரவ நிற்கிறது. உணவுப் பொருள்கள் கிடைக்கும், வளர்ந்து வரும் தேவைக்குத் தக்கபடி கிடைக்கும் என்ற உறுதி கிடையாது. விடியாத பஞ்சம் நகரவாசிகளை பயமுறுத்திக்கொண்டு நிற்கிறது.

இந்த அட்டைகள் கிராமப் பொருளாதாரத்தை உறிஞ்சிக் கொண்டிருக்கவிடுவோமானல் நம்முடைய கிராமங்கள் மயானங்களாகிவிடும்; நகரவாசிகள் இன்னும் கொடிய பஞ்சங்களைப் பார்க்கவேண்டியிருக்கும் என்று கம்யூனிஸ்டு கட்சி கூறுகின்றது. முழுபலத்துடன் கூறுகின்றது.

## எச்சரிக்கையும் எங்கள் கோஷமும்

*கண்யமான, நேர்மையான மனிதர்களனைவருக்கும் கம்யூனிஸ்ட் கட்சி ஓர் விஷயத்தைக்கூற விரும்புகின்றது. இது நம்மனைவருக்கும் பெரிய எச்சரிக்கையளிக்கும் விஷயம். நமது சுதந்திர இயக்கத்தின் விரோதிகளாக ஏகாதிபத்தியத்தின் ஏஜெண்டுகளாக நம்முடைய கிராமத்தைச் சுரண்டும், சுரண்டல் தம்பலாக விளங்கிய இம்மூன்று அட்டைகளும் நமது மக்களின் பிரதான அரசியல் கட்சிகளுக்குள்ளே நுழைந்து வருகின்றனர் என்று எச்சரிக்கை செய்கின்றது. தாங்கள் இன்னும் உயிர்வாழ்வதற்கு பேராசை பிடித்த தங்கள் வாழ்க்கையை, போக மோகம் பிடித்த தங்கள் வாழ்க்கையை நடத்*

துவதற்கு இதுதான் வழி என்று எண்ணுகின்றனர். பொது ஜனங்களின் கோபாக்னியைத் தவிர்க்க, பொதுஜன சக்திக்கு ஆளாகாமல் தப்பிக்க இந்தத் தந்திரத்தைக் கையாளுகின்றனர்.

நகரங்களிலும் கிராமங்களிலும் வாழும் நமது மகா ஜனங்கள் உடைமையையும் உயிரையும் காப்பாற்ற வேண்டுமென்றால் நமது கிராமப் பொருளாதாரத்தை உடனே மாற்றி யமைக்க வேண்டுமென்பது திண்ணம்.

## மூன்று புதிய சட்டங்கள்

புதிதாக ஏற்படுத்தப்படும் பொதுஜன மந்திரி சபைகள் ஒரு வருட காலத்திற்குள் ஜனநாயக பூர்வமான மூன்று சட்டங்களை அமுலுக்குக் கொண்டுவரும் வரையில் ஓய்வெடுத்துக் கொள்ளாது என்று உறுதி கூறுகின்றது. இந்தச் சட்டங்களை நிறைவேற்றி சரிவர அமுலுக்குக் கொண்டுவந்தால்தான் நிலச்சுவான்தார்களின் உறிஞ்சலும், கள்ளமார்க்கட்காரர்களும், வட்டிக்கு வட்டி வாங்கும் கொடியர்களும் நடத்தும் அநீதங்களும் ஒழியும். கிராமப் பொருளாதாரத்தின்மீது அவர்கள் செலுத்தும் ஆதிக்கம் ஒழியும்; எல்லா மக்களுக்கும் உணவு கிடைக்குமென்ற உறுதி ஏற்படும்; புதிய பஞ்சங்கள் தலைதூக்கி நம்மை வாட்டும் கோரக் காட்சிகள் தவிர்க்கப்படும்.

**நில உரிமை சம்பந்தப்பட்ட சட்டம். அச்சட்டம்:**

- நிலச்சுவான்தாரி முறையை ஒழிக்கவேண்டும்.
- யாரிடமும் 100 ஏகர் நிலத்திற்கு மேல் இல்லாதபடி நிலங்களையும் தேசீய அரசாங்கத்தின் சொத்தாக்க, வேண்டும்.
- ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட கமிட்டிகள் மூலம் நிலங்களை புனர் விநியோகம் செய்யவேண்டும்.
- இந்தக் கமிட்டிகள் பொதுஜன அரசாங்கத்தின் ஏஜண்டுகளின் உதவியுடன் நிலத்தைப் பங்கிடுசெய்யும். குடும்ப வாழ்க்கை நடத்துவதற்குப் போதிய வருமானமில்லாத ஏழை விவசாயிகளின் நிலங்களை எல்லாம் சேர்த்து தொடர்ந்தாற்போல் போதிய வருமானமளிக்கும் நிலப் பரப்பாக மாற்றி அமைக்கவேண்டும். மேலும் பரந்த முறையில் நவீன விவசாயக் கருவிகளை உபயோகிக்கக் கூடிய பெரிய பண்ணைகளை ஏற்படுத்த வேண்டும்.

**வட்டிக்கு வட்டி வாங்குவதைத் தடுக்கும் சட்டம்.** இச்சட்டம்:

- விவசாயிகளுக்கும், கிராமத் தொழில்களை நடத்துவோருக்கும் வட்டிக்கு வட்டி லாபம் பெறுவதற்காக அநியாய வட்டி முறையில் கடன் கொடுப்பதைத் தடுக்க வேண்டும்.
- கோவாப்பரேடிவ் (கூட்டுறவு) சபைகளின் மூலம் விவசாயிகளுக்குக் கடன் கொடுப்பதற்கு உத்திரவாதம் ஏற்படுத்தவேண்டும்; இந்தக் கூட்டுறவு சங்கங்கள் ஜனநாயக முறையில் கண்ட்ரோலுக்கு உட்பட்டிருக்கவேண்டும்; விவசாயிகளுக்குக் கடன் தருவோரின் பணத்தை நியாயமான வட்டிக்குக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்ய வேண்டும்.

**லாபக் கொள்ளையைத் தடுக்கும் சட்டம்.** இந்தச் சட்டம்:

- மக்களின் உணவில் லாபக் கொள்ளைக்காரர்கள் வியாபாரம் செய்யாமல் தடுக்கவேண்டும்,
- பொதுஜன உணவுப் பொருள்களிலும். விவசாயிகளின் தேவைப் பொருள்களிலும் கிராமத்திலுள்ள மொத்த வியாபாரிகளின் ஏகபோக உரிமைப் பிடிப்பை ஒழிக்க வேண்டும்.
- கொள் முதலையும் விற்பனையையும் செய்து பெரிய கூட்டுறவு சங்கங்களை அமைக்கவேண்டும்; அவை ஜனநாயக முறையில் நடத்தப்படவேண்டும்; வரட்டு அதிகார முறையில் நடத்தப்படக் கூடாது.
- இந்தக் கூட்டுறவு சங்கங்கள் விவசாயிகளின் விளை பொருள்களுக்கு நியாயமான விலையை உத்திரவாதம் செய்யவேண்டும். அவனுடைய அன்றாடத் தேவைகளுக்கு வேண்டிய பொருள்களை சரஸமான விலையில் கொடுக்கவேண்டும்.

## உடனடி நடவடிக்கைகள்

கீழ்காணும் நடவடிக்கைகளை பொதுஜன மந்திரி சபைகள் உடனடியாக அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று கம்யூனிஸ்டு கட்சிகோரும். அதற்கு வேண்டிய எல்லா நடவடிக்கைகளையும், நிர்வாக அதிகாரத்தையும், பொதுஜன அவசரச் சட்டங்களையும் உபயோகப்படுத்தி. இந்தக் கும்பல்கள் தங்கள் சக்தியை வளர்த்துக்கொள்வதற்கு முன்பே கிராம ஜனங்களுக்கு அவசிய

மான நிவாரணத்தை உடனடியாக அளிக்குமாறு செய்ய வேண்டும்.

(1) தரிசாகக் கிடக்கும் எல்லா நிலங்களையும்—சர்க்காருடையதானாலும் சரி, நிலச்சுவான் தாருடையதானாலும் சரி, எல்லா தரிசு நிலங்களையும்—நிலமில்லாத விவசாயிகளுக்கும் ஏழை விவசாயிகளுக்கும் கொடுக்கவேண்டும். உணவுப் பொருள்கள் உற்பத்திக்காக அவற்றை அவர்களுக்குக் கொடுக்கவேண்டும்.

(2) நிலமற்ற விவசாயிகளுக்கு குறைந்தபட்ச கூலி உத்திரவாதம் செய்யப்படவேண்டும்.

(3) போதிய வருமான நிலமில்லாத விவசாயிகள் கொடுக்கும் வாரத்தைக் குறைக்கவேண்டும், அவர்களுடைய குடும்ப சம்ரக்ஷணை செய்து உணவுப்பொருள் உற்பத்தியில் அவர்கள் விளக்கம் பெறவேண்டும்.

(4) கூட்டுறவு இயக்கத்தைப் பலப்படுத்தி ஜனநாயக முறையில் அமைக்கவேண்டும். பொதுஜன அரசாங்கம் இவ்வாறு செய்ய கீழ்க்காணும் நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும்.

(i) கிராமங்களில் கள்ள மார்க்கெட் நடத்தும் கயவர்களை எதிர்த்துப் போராடுவதற்காக கொள்முதல்—விற்பனை செய்யும் கூட்டுறவு சங்கங்களுக்கு பண உதவி அளிக்க வேண்டும்.

(ii) விவசாய விளைபொருளுக்கு நியாயமான விலை உத்திரவாதம் செய்யப்படவேண்டும்.

(iii) கிராமங்களுக்கு வேண்டிய ஆலைப்பொருள்களை நியாயமான விலைக்குக் கொடுக்கவேண்டும்.

(5) கிராமப்புறங்களில் புதிய பள்ளிக்கூடங்கள், அதிகப்படியான பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தவேண்டும்; கிராம வாசிகளுக்குப் புதிய வேலைகள் கிடைக்க வழிதேடவேண்டும்.

(6) விவசாய இளைஞர்களுக்கு நவீன விவசாய முறைகளில் பயிற்சி அளிக்கப்படவேண்டும், நாட்டுப்புற கூட்டுறவு சங்கங்களை நடத்தி, கால்நடை போஷணைப் பண்ணைகள் நடத்தப் பயிற்சி அளிக்கப்படவேண்டும்.

(7) பெரிய நிலச்சுவான்கள் நிலவரியைத் தவிர விவசாய வரி—வருமானம் உயர உயர விகிதாசாரம் உயரும் வகையில் விதிக்கப்படும் வரி—கொடுக்கவேண்டும். விவசாயத்திலிருந்து

வருடத்திற்கு ரூ. 6000-க்கு மேல் வருமானம் ஒருவருக்கும் வராதபடி இவ்வரி விதிக்கப்படவேண்டும்.

இந்த நடவடிக்கைகளெல்லாம் கிராமப் பொருளாதாரத்தின் புனருத்தாரணத்துக்கான ஆரம்ப நடவடிக்கைகள்; ஏழை விவசாயிக்கும் நிலமில்லாத விவசாயிகளுக்கும் உடனடியாகக் கொடுக்கவேண்டிய நிவாரண நடவடிக்கைகள்தான்; இரத்தம் உறிஞ்சி அநியாயமாகக் கொழுத்த நிலச்சுவானிடமிருந்து ஒரு பகுதியை மீட்கின்றது. இந்த ஆரம்ப நடவடிக்கையின் மூலம் நோமையான கிராம வாசிகளனைவரும் கிராமப் புனருத்தாரணத்துக்கும், உணவுப் பொருள் உற்பத்திக்கும் மகத்தான போராட்டத்தை ஆரம்பிக்கின்றனர்.

## மூன்று அட்டைகளுக்கு எதிராக

இந்திய சுதந்திரப் போராட்டத்தின் இன்றியமையாத ஒரு பகுதியாக கம்யூனிஸ்ட் கட்சி கிராமவாசிகளைத் தட்டி எழுப்பும். பிரிட்டிஷ் ஆட்சியினால் ஏற்படுத்தப்பட்டதும் கிராம பொருளாதாரத்தின் கீழ்த்தரமான சின்னங்களுமான இந்த மூன்று அட்டைகளையும் எதிர்த்து கிராமவாசிகளனைவரையும் கம்யூனிஸ்ட் கட்சி தட்டி எழுப்பும்:

கிராமவாசிகளுக்கான இத்திட்டத்தை கம்யூனிஸ்ட் கட்சி முன்வைப்பதில், கிராமங்களில் உழைத்துவாழும் ஜனங்களுடைய வாழ்க்கையைப் பாதுகாத்து வாழ்க்கைக்கு உறுதியளித்து, வளர்ப்பதையே முக்கியமாகக் கருதுகிறது. கிராமத்தின் பொதுவான நலனுக்காகப் பாடுபட முன்வரும் அனைவருடைய க்ஷேமத்தையும் கருதுகிறது.

சிறிய ஜமீன்தார் மீதோ, பணக்கார நிலச் சொந்தக்காரர் மீதோ கம்யூனிஸ்ட் கட்சி கைவைக்கப் போவதில்லை. ஆனால் தலைசிறந்த விவசாயிகளாக விளங்க சந்தர்ப்பத்தை அளிக்கும்; கிராமத்திலேயே நல்ல கால்நடைகளை வளர்ப்பவர்களாக, கிராம சமூகத்தின் சிறந்த அங்கத்தினர்களாக விளங்க சந்தர்ப்பமளிக்கும். அவர்களும் கிராம மக்களை உறிஞ்சும் அட்டைகளாகப் போகக்கூடாது என்று விரும்புகிறது. கிராமத்தில் அவர்களுக்கிருக்கும் செல்வாக்கை உபயோககரமான உழைப்பில், கூட்டுறவு முறைக்கு உபயோகப்படுத்தவேண்டும் என்று விரும்புகிறது.

பாடுபட்டுழைக்கும் பாமர விவசாயிகளில் சகல பகுதிகளின் நலன்களையும் பிரதிபலிக்கும் இத்திட்டத்தின் கீழ் கம்யூனிஸ்ட் கட்சி அவர்களை ஐக்கியப்படுத்தும்.

விவசாயிகள் நிலமற்ற விவசாயக் கூலிகளின் கோரிக்கைகளை ஆதரிக்க வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி கேட்டுக்கொள்ளும். கிராம ஒற்றுமையைக் கட்டி வளர்த்து அவர்களை அழிக்க முடியாத அபார பலத்தைப் பெற்று அவர்களுடைய எதிரிகளை எதிர்க்கவேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி கூறுகிறது.

நிலமற்ற விவசாயக் கூலிகள் விவசாயிகளுடன்—குடியானவர்களுடன்—ஐக்கியம் வேண்டும் என்று கம்யூனிஸ்ட் கட்சி கூறும். அவர்களையும் அதிகமாக வாட்டி வதைக்கும் அட்டைகளை எதிர்த்துப் போராட இந்தப் பொதுவான போராட்டத்திற்காக விவசாயிகளுடன் ஒன்றுபட வேண்டும் என்று கூறுவோம்.

கிராமங்களிலுள்ள ஆசிரியர்கள், டாக்டர்கள் முதலிய நேர்மையான சகலருடைய ஆதரவையும் கம்யூனிஸ்ட் கட்சி தேடும். புதிய கிராமங்களைச் சிருஷ்டிக்க அவர்களும் உதவவேண்டுமென்று கூறும்.

**"மூன்று அட்டைகளை எதிர்த்து சகலரும் திரளுவோம்!"**

**'ஒவ்வொரு கிராமத்திலும் புதிய வாழ்க்கை மலரவேண்டும்!"**

**"கிராமங்களின், கிராம வாழ்க்கையின், கிராம மக்களின் எதிரிகள் அனைவரையும் எதிர்த்து ஒன்றுபட்ட போராட்டங்களை நடத்தவேண்டும்!"**

**"சுதந்திர இந்தியாவில் சுதந்திர கிராமங்களை அமைப்போம்!"**

என்ற கோஷங்களின் அடிப்படையில் கிராமங்களனைத்தையும் தட்டி எழுப்பித் திரட்டுவோம்.

## V

## கம்யூனிஸ்ட் கட்சியின் வேண்டுகோள்

**தொழிலாளர்-குடியானவ சகோதரர்களே!**

உங்கள் தொழிற்சங்கங்களை அமைத்தவர்கள் என்ற முறையில், தொழிலாளர்களே, உங்களுடைய ஆதரவைக் கம்யூனிஸ்ட் கட்சி கோருகிறது. உங்கள் வர்க்கத்தின் ஒற்றுமை கட்டுப்பாடு என்பதைக்கொண்டு வரப்போகும் மாபெரும் போராட்டங்களை

நடத்துவதற்குத் தயாராவதற்காகவும் உங்கள் செங்கொடியின் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டுமென்பதற்காகவும் உங்களுடைய ஆதரவைக் கோருகிறது.

விவசாயிகளே! குடியானவர்களே! உங்களுடைய கிஸான் சபைகளைக் கட்டிவளர்த்தவர்கள் என்ற முறையிலே உங்களுடைய ஆதரவைக் கம்யூனிஸ்ட் கட்சி கோருகிறது. உங்கள் கிராமாந்திரங்களை அழித்து வரும் எதிரிகளை எதிர்த்துப் புதிய போராட்டங்களை நடத்தவேண்டும், வெற்றி காணும்வரை தொடர்ந்து நடத்தவேண்டும் என்று உங்கள் ஆதரவைக் கோருகிறது. உங்கள் முன்னோர்கள் வாழ்ந்து வந்த அதே கிராமங்களில் புதிய வாழ்க்கையை, சுபிட்சமான சந்தோஷகரமான வாழ்க்கையைச் சிருஷ்டிக்க உங்களுடைய செங்கொடியின் பெயரால் உங்கள் ஆதரவைக் கோருகின்றது.

பெரியோர்களே! தொழிலாளி வர்க்கத்திலுள்ள பெரியோர்களே! விவசாயிகள் குடியானவர்கள் வர்க்கத்திலுள்ள பெரியோர்களே! உங்களுடைய வர்க்கத்திலே பிறந்த உங்கள் புதல்வர்களை —சிறந்த புதல்வர்களைஉங்களுடைய கட்சிதான் அபேட்சகர்களாக நிறுத்தியிருக்கிறது. கம்யூனிஸ்ட் அபேட்சகர்களில் பெரும்பான்மையோர் அவர்கள் தான். ஜாதி ஹிந்துக்களும், முஸ்லிம்களும், தீண்டப்படாதவரென்று அழைக்கப்படுவோரும், சிக்கியர்களும், கூர்க்கர்களும், கார்வாலிகளும், மணிப்பூர் வாசிகளும், வங்காளிகளும், மலையாளிகளும், ஆந்திரரும், தமிழரும், கன்னடர்களும் மராத்தியரும் இருக்கின்றனர்.

## தாழ்த்தப்பட்ட சமூகத்தினரே!

நம்முடைய நாட்டு மகாஜனங்களில் மிகவும் ஒடுக்கப்பட்டு அவதிபுறும் பகுதி நீங்கள்தான். புது மாதிரியான கிராமங்களுக்காகவும் எங்கள் கட்சி நடத்தும் போராட்டத்தின் பயனை உங்களுக்குத்தான் அதிக முன்னேற்றம் கிடைக்கும் என்பதைக் கூற விரும்புகின்றோம்.

சமூக அமைப்பில் ஏற்பட்டுள்ள எவ்விதமான அடக்கலையும் ஒடுக்கலையும் எதிர்த்து நாங்கள் என்றென்றும் இடைவிடாது போராடுவோம் என்பதைக் கம்யூனிஸ்ட் கட்சி கூறுகின்றது. நீங்கள் அனுபவிக்கும் துயர்களை நீக்கி, அரசியல் பொருளாதாரத் துறைகளில் சரிசமானமான அந்தஸ்தை இந்நாட்டின் அரசாங்க அமைப்பில் உங்களுக்கு ஏற்படுத்த நாங்கள் பாடுபடுவோம்.

தரிசு நிலங்களை நிலமற்ற விவசாயக் கூலிகளுக்குக்கொடுக்க வேண்டும் என்ற அம்சத்தை அமுலுக்குக் கொண்டு வருவதில்

தீண்டப்படாதோருக்கு விசேஷ கவனம் முதலில் செலுத்தப்பட வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி கூறும். அவர்கள்தான் நிலமற்ற விவசாயிகளில், விவசாயக் கூலிகளில் பெரும்பான் மையோர்.

## தாய்மார்களே! சகோதரிகளே!

எங்களுடைய கட்சியின் திட்டத்தின் மூலம் புதிய வீட்டு வாழ்க்கையை, சந்தோஷகரமான வாழ்க்கையை, அமைப்பதற்கு வேண்டிய வழியை நீங்கள் காண்பீர்கள்.

தங்கள் புதல்வர்கள், கணவன்மார் முதலியோர் வாழ்க் கையை வளர்க்கும் வகையில் வேலை செய்வதற்கு எங்கள் திட்டம் இடமளிக்கும் என்பதைக் காண்பீர்கள். அதற்காக ஊக்கமுடன் நீங்கள் உழைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறோம்.

நமது நாட்டின் அரசியல் வாழ்க்கையிலும் பொருளாதார வாழ்க்கையிலும், சட்டங்களிலும் பெண்களுக்கு ஆண்களோடு சரிசமமான அந்தஸ்து ஏற்படுத்துவதற்கு கம்யூனிஸ்ட் கட்சி க ட மைப்பட்டிருக்கிறது.

## வாலிபர்களே! இளைஞர்களே!

உங்களுடைய தந்தையர்கள் கண்ட கனவினும் உயர்வான ஒரு புதிய வாழ்க்கையை ஏற்படுத்த எங்களுடைய கட்சியின் திட் டத்திலே வழிகாண்பீர்கள். கம்யூனிஸ்டு கட்சி இந்நாட்டிலுள்ள கட்சிகளுக்குள் இளமையான கட்சி. உங்களுடைய இளம் மனது, களங்கமற்ற மனது உண்மையான சுதந்திரக் கொள்கைகளை ஏற் றுக்கொள்ளும் என்ற நம்பிக்கையுடன் உங்களை அணுகுகின்றது. சுதந்திரப் போராட்டத்தின் அறைகூவலுக்கு உங்கள் உள்ளம் ஊக்கமுடன் பதிலளிக்கும் என்று உங்களுக்கு வேண்டுகோள் விடுக்கின்றது.

வேலையில்லாத் திண்டாட்ட பூதத்தை விரட்டுவதற்கு சபத மெடுத்திருக்கிறது கம்யூனிஸ்டு கட்சி. நாட்டின் தேசீய வாழ்க் கையை ஜனநாயக அஸ்திவாரத்தின்மீது எழுப்ப வேண்டும், அவ் வாறு செய்யும்பொழுது இளைஞர்களுக்கு ஆக்கல் திறன்படைத்த உழைப்புக்கு மேன்மேலும் சந்தர்ப்பம் அளிக்கப்பட வேண்டும் என்று கம்யூனிஸ்ட் கட்சி போராட சபத மெடுத்துக்கொண் டுள்ளது.

இளைஞர்கள் தேவைகளைக் கவனிப்பதில் கம்யூனிஸ்ட் கட்சி விசேஷ கவனம் செலுத்துகிறது; கல்வி வசதியைப் பெருக்க

வேண்டும் என்று போராடும்; ஸ்காலர் ஷிப்புகள் கொடுக்கவேண்டும், பள்ளிக்கூடங்களில் ஜனநாயகம் நிலவவேண்டும். பொது ஜன சேவைக்காக வாழ்க்கையை நடத்த வேண்டும் என்ற நல்லெண்ணங்கொண்ட யுவர்கள் கனவுகளை நினைவாக்குவதற்குச் சந்தர்ப்பமளிக்க வேண்டும் என்று கம்யூனிஸ்ட் கட்சி போராடும்

## சுதந்திரப் பிரியர்களான படிப்பாளிகளே !

புரட்சி மனப்பான்மை கொண்ட மத்தியதர வர்க்கத்தினரே! நகரங்களில் மத்தியதர வர்க்கத்தையும் தொழிலாளி வர்க்கத்தையும் ஐக்கியப்படுத்தும் எங்களுடைய கட்சி. கிராமங்களில் விவசாயிகளையும் அவர்களையும் ஐக்கியப் படுத்துவது—பொதுவான நலன்களுக்காக ஐக்கியப்படுத்தக்கூடியது—கம்யூனிஸ்ட் கட்சி என்பதைக் காண்பீர்கள்.

நம்முடைய தேசீய வாழ்க்கையில் ஜனநாயக முறையின் உண்மையான கொள்கைகள் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமென்பதைக் காண்பீர்கள்; தேசத்தில் தேசபக்திகொண்ட சகல சக்திகளையும் ஐக்கியப்படுத்தும் பகுதி என்பதைக் காண்பீர்கள்; எவ்வித வித்தியாசங்களிருந்தாலும் பொது ஜனங்களைக் காப்பாற்றுவதே முதற் பணியாகக்கருதும் கட்சி என்பதைக் காண்பீர்கள் அனைவரையும் ஒன்று திரட்டி தோளோடு தோளாக நின்று நம் தாய் நாட்டின் விடுதலைப் போராட்டத்திற்கு, இறுதிப் போராட்டத்திற்குத் தயாரிக்கும் ஒரே நோக்கத்திற்காக அல்லும் பகலும் பாடுபடும் கட்சி எங்களுடையது என்பதைக் காண்பீர்கள் என்று கம்யூனிஸ்ட் கட்சி உங்களைக் கேட்டுக்கொள்கிறது.

- மற்ற கட்சிகளைப் பற்றி தூற்றிக்கொண்டு, பழி கூறிக்கொண்டு நிற்காது. சகல கட்சிகளையும் ஒன்றுபடுத்தும் அடிப்படையை எடுத்துரைக்கும் கட்சி கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான்.

- வேவல் பிரபுவின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருக்காமல் சகோதர கட்சிகளை அணுகிவரும் கட்சி கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான்.

- "எங்களுக்கு மட்டும் தேசபக்தியும் விவேகமும் உண்டு, மற்றவர்களுக்குக் கிடையாது" என்று கூறாத கட்சி எங்கள் கட்சி ஒன்றுதான்.

- சட்டத்தைத் தயாரித்து, உருப்படியான யோசனைகளைக் கூறி சகல சுதந்திரப் பிரியர்களையும் ஒன்றுபடுத்த வழி தேடுகின்றது கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான்; மற்ற வர்களுடைய லட்சியங்களை ஏற்றுக்கொள்கிறது. ஆனால் அநியாயமான கோரிக்கைகளை மறுக்கிறது. சுதந்திரக் கொள்கையை அனைவருக்கும் அனுபவ சாத்தியமாக்க வேண்டுமென்று கூறுகின்றது; அனைவருடைய நலன் களுக்காகவும், அனைவருக்கும் நியாயம் வழங்கப்பட வேண்டும் என்பதற்காகவும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தி யத்தை எதிர்த்து சுதந்திரம் பெறுவதற்காகவும், நமக் குள்ளே நம்மனைவருக்கும் சுதந்திரம் ஏற்படுவதற்காக வும், நம் தேசத்திலே ஒரு பொதுஜன அரசாட்சி ஏற்படு வதற்காகவும் சுதந்திரத்தின் அடிப்படையான கொள் கைகளை அனைவரும் ஏற்று அனைவருக்கும் வழங்க வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி கூறுகிறது.

- கம்யூனிஸ்ட் கட்சிக்கு ஒரே ஒரு நோக்கம்தான். சுதந் திரப் பிரியர்களான சகல இந்தியர்களையும் சுதந்திரப் போராட்ட அணிவகுப்பிலே, முடிவான சுதந்திரப் போருக்காகவும் சுதந்திர தேசிய இனங்களைக்கொண்ட ஸௌஜன்யக் குடும்பமாக இந்தியா மலருவதற்காகவும், திரட்டும் நோக்கம்தான் அது! ஆசியாவில் விடுதலைப் பணியாற்றும் ஓர் இந்தியாவை, உலக அரசியலிலே ஏகாதிபத்தியம் பிற்போக்குக்கு எதிராக முற்போக்கான பங்கை எடுத்துக்கொள்ளும் ஓர் இந்தியாவை, சுதந்தி ரத்தை விரும்பும் ஜனநாயக நாடுகளுடன் சேர்த்து, நாம் சிருஷ்டிப்பதற்காக சுதந்திரப் போராட்ட அணியை ஏற்படுத்தவேண்டும்.

## கம்யூனிஸ்டுகளுக்கு ஓட்

- **ஏகாதிபத்தியத் திட்டத்திற்கு எதிராக, இந்திய திட் டத்தை, உண்மையான திட்டத்தை ஏற்படுத்த**

  *கம்யூனிஸ்டுகளுக்கு ஓட் போடுங்கள்*

- **சுதந்திரத்தை விரும்பும் இந்தியர்களிடையே சண்டை கூடாதென்று சுதந்திரப் பிரியர்கள் அனைவருடைய ஒற்றுமைக்காக**

  *கம்யூனிஸ்டுகளுக்கு ஓட் போடுங்கள்*

- பிரிட்டிஷ் சர்க்காருடன் தனிப்பட்ட சமரஸம் ஏற்படுத்திக் கொள்ளலாம் என்ற பிரமையை எதிர்த்து, பிரிட்டிஷ் ஆதிக்கத்தை ஒழிக்கும் ஒன்றுபட்ட போராட்டத்திற்காக

  *கம்யூனிஸ்டுகளுக்கு ஓட் போடுங்கள்*

- சுதந்திரத்திற்காக நாம் நடத்தவேண்டிய முடிவான போராட்டத்தில்; இறுதிப் போராட்டத்தில் காங்கிரஸ் - லீக் - கம்யூனிஸ்ட் ஐக்கிய முன்னணி ஏற்படுத்துவதற்காக

  *கம்யூனிஸ்டுகளுக்கு ஓட் போடுங்கள்*

- சுதந்திர இந்தியாவிலே சுதந்திரத் தாயகங்களுக்காகவும், சுதந்திர ஜனங்களுக்காகவும்,

  *கம்யூனிஸ்டுகளுக்கு ஓட் போடுங்கள்*

இந்திய சுதந்திரப் போராட்டத்தில் எண்ணற்ற தியாகிகளை ஞாபகப்படுத்திக்கொள்ளுங்கள்; முதல் முதலில் இந்தியப் புரட்சி இயக்கத்தின் இணையற்ற வீரர்களான கெதர் பாபாக்களும், பகத் சிங்கின் வீரர்களும், சிட்டகாங் ஆயுதசாலை வீரர்களும், 1930-ல் வங்கத்தில் தோன்றிய பயங்கர இயக்கத்தின் இளம் தலைவர்கள் அனைவரும் இன்று கம்யூனிஸ்ட் கட்சிக்குள்ளே வந்துவிட்டனர்.

இந்திய சுதந்திரப் போராட்டத்திலே இந்தியப் புரட்சிக்காக நிற்கும்.

**மத்திய கமிட்டி**
**இந்திய கம்யூனிஸ்டுக் கட்சி.**

